472

# தேசிய கீதங்கள்.

திரிசிரபுரம் மங்களதாஸ் அவர்கள் இயற்றிய தேசிய கீதங்கள்




என்பதைப் பார்த்து வாங்குங்கள்.

7 OCT 1931

...ான் மங்களதாஸ் இயற்றியது.

1931. [விலை அணா 2.

O-,1MMO,T
N31
176266

COCT 1931

உ

வேலுமயிலும் துணை.

# தேசிய கீதங்கள்.

## மதுக்கடை மறியல் பாட்டுகள்.

### நாசக் காலதாசி என்ற மெட்டு.

பாருங்கள் மதுக்கடையே — எதிர்
பறக்குது கதர்க் கொடியே — துணை
வாருங்கள் இனித்தடையே — யில்லை
மறியல் செய்திடும்படி யே — இந்த
மதுபானமே — தொலையாவிடில்
கொலைபாதகத் — தொழிலே மிகும் — (பா)

**தோகையறு**

பஞ்சமா பாதகத்தி லொன்ருன கட்குடியால்
பாரிலுள்ளோர்
கொஞ்சமா கெட்டவர்கள் கூறவென்ருல் பலகோடி
குலவு மாதர்
தஞ்சமாக் கழுத்திலிட்ட தாலிதனை விற்றேனும்
தடையிலாது
நஞ்சமாகிய மதுவை குடிப்பவர்தங் குடும்பமது
நாசந்தானே

COCT 1931

உ

வேலுமயிலும் துணே.

# தேசிய கீதங்கள்.

## மதுக்கடை மறியல் பாட்டுகள்.

### நாசக் காலதாசி என்ற மெட்டு.

பாருங்கள் மதுக்கடையே எதிர்
பறக்குது கதர்க் கொடியே துணே
வாருங்கள் இனித்தடையே யிலே
மறியல் செய்திடும்படி யே இந்த
மதுபானமே தொலேயாவிடில்
கொலேபாதகத் தொழிலே மிகும் (பா)

தொகையறு

பஞ்சமா பாதகத்தி லொன்முன கட்குடியால்
பாரிலுள்ளோர்
கொஞ்சமா கெட்டவர்கள் கூறவென்முல் பலகோடி
குலவு மாதர்
தஞ்சமாக் கழுத்திலிட்ட தாலிதனே விற்றேனும்
தடையிலாது
நஞ்சமாகிய மதுவை குடிப்பவர்தங் குடும்பமது
நாசந்தானே

176266

பாட்டு

கள்ளருந்திடப் பாரும் கொலை
களவு செய்திட நேரும் இன்னும்
தெள்ளிய புலன்மாறும் புணர்
சிற்றின்பந் தனைக்கோரும் அதி

சினமே தரும் இனமாகிய
மது யாவருங் குடியாவழி (பாரு)

தோகையறு

வண்டினங்கள் திரட்டுகின்ற செழுந்தேனை இலவசமாய் வந்தோர் வேடன்

கொண்டேகும் கொள்கையைப் போல் வருடமொன்றுக் கெழுபத்தெழு கோடி ரூபாய்

தண்டத்தீர்வை கொடுக்கச் செய்யுமிந்த பணங்களுரு சாருயத்தை

கண்டமட்டும் குடிப்பதினுல் கடன்பட்டு நெஞ்சமிக கலங்குரோமே

784 10954

பாட்டு

பெண்டிர் பிள்ளையை வருத்தும் மது
பிரமகத்தியைப் பொருத்தும் வீண்
சண்டை பிடிக்க வற்புறுத்தும் சிறைச்
சாலையிற்புகத் துறத்தும் எனச்

சாதகம் பெற ஓதுமங்கள
நாதன் செந்தமிழ் வாசகந்தனை (பாரு)



# மதுவிலக்கு.

## கந்தா காருண்யனே என்ற மெட்டு.

### பல்லவி

உண்ணாதீர் மதுவே உளமயக்கிடவே
எண்ணாதீ ரிழிவே இதனா லழிவே (உண்)

### அனுபல்லவி

எண்ணிலாத துன்பமேவந்
தெய்திடும் துயர் செய்திடும்
ஈனமாகும் தென்னங்கள்ளால்
ஞானபாகம் நைதிடும் (உண்)

### பல்லவி எடுப்பு

ஒன்றார் கொலை களவு ஒழிந்தித முறவே
சொன்னார் காந்திமகான் சுதந்திரம் பெறவே (உண்)

### அனுபல்லவி எடுப்பு

ஊதியமெல் லாந்தொலை ப
உற்பவிக்கும் கள்ளையே
உண்பதாலே உலகமீது
உண்டுபெண்ணாஞ் சள்ளையே (உண்)

### பல்லவி எடுப்பு

எல்லாம் தெரிந்துழலும் இந்து நேசர்களே
வல்லர்ண்மைப் புகழும் மகா ரோஷர்களே (உண்)

### அநுபல்லவி எடுப்பு

எள்ளுகின்ற வெள்ளையர்தம்
இம்சை நீங்கும் உண்மையே
சுதந்திர விஜயமங்கள
நாதன் சொல்லுந் தன்மையே (உண்)

* * * * * * * * *

## ஆண்டிப்பண்டாரம் என்ற மெட்டு.

### பல்லவி

ரோஷம் வல்லையா விசு
வாச மில்லையா இன்னும் (ரோ)

### அநுபல்லவி

ஆசைகொண்டே மதுவை அருந்திடும் நண்பர்களே
ஆத்மீக சுத்தியாக சாத்மீக மறியல் செய்ய (ரோ)

நாசமுற்ற மதுவை நஞ்சமென்றே வெறுத்து
நேசமுற் றிந்தியாசு தேசத்தொண்டு செய்திடவும் (ரோ)

தாய்நாட்டை எய்ப்பதற்கு பேய் நாட்டங் கொண்டலையும்
தாட்டீக வெள்ளையர் தங் கூட்டுரவை யொழிக்க (ரோ)

சும்மா கிடைத்திடுமோ சுயராஜ்ஜியம் நமக்கு
சன்மார்க்க காந்தி மகான் சாற்றுமுறை போல்நடக்க (ரோ)

வாச மதுரத்தமிழ் மங்கள நாதன் புகழ்
மாசிலாப் பாரதத்தாய் மானந்தன்னைக் காப்பதற்கு (ரோ)

## கதர் மஹிமை.

### காமி ஸத்தியபாமா என்ற மெட்டு.

இராகம்—கமாஸ் தாளம் ஆதி

பல்லவி

காந்தி மகான் போற்றும் கைக் கதரணிவீர்
கைக் கதரணிவீர்
அணிவீர்
அணிவீர் நம் (காந்)

அனுபல்லவி

மாந்தர்கள் வறுமையை மாற்றுங் கதருடையை
வாங்கவே யுளந் துணிவீர்
துணிவீர்
துணிவீர்
துணிவீர் நம் (காந்)

பாரத தேவிதரும் பாலர்களனைவரும்
பாரில்சு யாட்சி பெறவே
பெறவே
பெறவே
பெறவே நம் (காந்)

அறுபது கோடி ரூபாய் வருடமொன்றுக்குச் சார்பாய்
அன்னிய சீமைக் கேகுதே
ஏகுதே
ஏகுதே
ஏகுதே (காந்)

சங்கீத சாரங்கமழ் மங்கள நாதன் தமிழ்
சாற்றும் உண்மையை உணர்வீர்
உணர்வீர்
உணர்வீர்
உணர்வீர் நம் (காந்)



# தேசியக் கிளிக்கண்ணிகள்

## அஞ்சுவயதினிலே என்ற கிளிக்கண்ணி மெட்டு.

நயமான கதராடை காணிலத்தோ ரணிய
சுயராஜ்ஜியப் பதவிதான்—கிளியே
சுருக்கத்தில் கிடைக்குமடி

பணியாளர் பிழைக்கவே பரதேச ஆடைகளைய நாம்
அணியாதிருத்தல் நயமே—கிளியே
அதுதான் சுயராஜ்ஜியமே

பாட்டன்முப் பாட்டன்மார்கள் பாங்குடனே யணிந்த
நாட்டுக் கதருடையின்மேல்—கிளியே
நம்பிக்கை கொள்வோமடி

கதராடை யணியாமல் இதராடை யணிவோரை
பதராகத் தூற்றுவாரடி—கிளியே
பரிகாசம் பண்ணுவாரடி

மதுரம் மொழியுந் தமிழ் மங்கள நாதன் புகழ்
கதருடை யணிந்திடவே—கிளியே
கங்கணங் கட்டுவோமடி



## காலக்கொடுவினை மேலுக்கு மேலாக
## என்ற மெட்டு.

ஜீவிய மானசு தேசிய மக்களின் பாவனையோ வெகு மோசம்
தீவிர மாகயிவர்களுக் கின்னமுஞ் ஜெனிக்கவில்லையோ
ரோஷம் (ஜீவிய)

வருடமொன்றுக் கறுபது கோடி மதிப்பு ரூபாய் லாபம்
தரு மிந்தக்கத ராடை யுடுத்தெனில் தழைக்குதே
பெருங்கோபம் (ஜீவிய)

வான மிடிந்து விழும்படி வந்தே மாதர மென்றிசை பாடுரார்
தானொரு சிகப்புத்தலையைக் கண்டதும் தட்டுக்கெட்டே
விழுந்தோடுரார் (ஜீவிய)

நானொரு தேசிய பக்தனென்றே யிந்த நாட்டினில்
வெளிச்சம் போடுரார்
மானிலத்தில் சிறை செல்லென்ற போதினில்
மன்னிப்புக் கேட்டுத்திண்டாடுரார் (ஜீவிய)

ஜாதிமத விபரீதங்கள் பேசியே சண்டை பிடிப்பதில் வீரர்
ஓதும் சுயாட்சியெப் போகிடைக்குமென்று
ஜோதிடம் பார்ப்பதில் சூரர் (ஜீவிய)

குவலயந்தனிற் கண்டதே காட்சிகொண்டதே
கோலமென் றெண்ணுவார்
அவலமாகவே உற்றதைச் சொல்லியே
அன்னியர்க்குதவி பண்ணுவார் (ஜீவிய)

காதல் மதுக்குடி சூது கொலை யொடு
களவும் பெருத்துப் போச்சே
பாதி மீசையுஞ் சுருள்கிராப்பும் பாரிலுற்பவமாச்சே (ஜீவிய)

இப்படிச் சீர்குலைந்தால்சுய ராஜ்யம் எய்திடுமோ பெரியோரே
கற்பனைமிக்கநயக் கவிமங்களம்செப்பு நெறி யுணர்வீரே (ஜீவிய)

# சுதந்திரச் சங்கநாதம்

## ஆடுபாம்பே ஆடுபாம்பே என்ற மெட்டு.

பல்லவி

ஊது சங்கே மகிழ்ந் தூது சங்கே இனி
ஒற்றுமை யாவீரென் றூது சங்கே

அனுபல்லவி

ஆதியில் மானிடப் பிறவி யொன்று
ஆணொன்றும் பெண்ணொன்றும் தன்மை யிரண்டு
ஜாதி யிவையொழிய வேறில்லை யென்று
சமரசத்துணை பெறவூது சங்கே (ஊது)

ஜாதிக் கொடுமையினல் சண்டை பிடித்து
தாய் நாட்டை வெள்ளையர்க்குப் பறிகொடுத்து
பாதக மாகிய கள்ளைக்குடித்து
பாழடையாதீரென் றூது சங்கே (ஊது)

காந்தியின் உயிர்நிலைக் கதருடையே
கதருடை யணைவருங் கட்டும்படியே
வாய்ந்திடும் பாரத மக்களிடையே
வங்குணமாக நின் றூது சங்கே (ஊது)

அன்னிய சீமைத்துணி பகிஷ்காரம்
அடையவே திடமிகும் பிரசாரம்
பண்ணுவதாலே பொருளாதாரம்
பாரிலுண்டாகு மென்றூது சங்கே (ஊ)

துஞ்சிடு மாந்தர்கள் துள்ளி யெழவே
சுதந்திர தேவியின் பதந் தொழவே
வஞ்சப் புலையர் முடி மண்ணில் விழவே
மட்டில்லா வெற்றி புனைந்தூது சங்கே (ஊது)

மண்ணிய கண்ணன் மணி வண்ணன் சங்கே
மங்கள நாதன் புகழ் வீர சங்கே
அன்னியர்க்கஞ்சோமென் றூது சங்கே
அடிமை களைந்தோமென் றூது சங்கே (ஊது)

---

ஒவ்வொரு மாதமும் வெளிவரும் கோலம்பியா ரிகார்டுகளில்
பாடல்கள் வேண்டுமானல்

## தங்கக்குடமெடுத்து தண்ணிக்கு போகையிலே என்ற கும்மி மெட்டு.

கொக்கரக்கோ வெனவே சுதேச
கோழியுங் கூவுதடி
தூக்கமகன் றிடவே பாப்பா
துள்ளி யெழுந்திடுவாய்

துள்ளி யெழுந்திடுவாய் சுதேச
தொண்டு புரிந்திடுவாய்
பள்ளிக்கூடஞ் சென்று பாப்பா
பைந்தமிழ் கற்றிடுவாய்

கொடி பறக்குதடி சுதேச
கொடி பறக்குதடி
விடுதலை பெறவே பாப்பா
முடி வணங்கிடுவாய்

வன்னப் பசுங்கிளிகள் கிண்ணாரம்
வாசிக்கும் பூஞ்சோலை
தன்னில் விளையாடி நூற்பாய்
தக்கிளியால் நூலை

தன்னலப் பேய்பிடித்து ஜாதிமதச்
சண்டை புரியாதே
அன்னிய ஆடையின் மேல் பாப்பா
ஆசை நீ கொள்ளாதே

---

எம்மால் வெளியிட்டுள்ள ஒரிஜினல் கோலம்பியா கீதங்கள்-
1, 2, 3 & 4 பாகங்கள் அவசியம் பார்க்கவும்.

மங்கள நாதன் புகழ் — செந்தமிழ்
வாசகத்தைப் படிப்பாய்
தங்குதடை யின்றி — பாப்பா
சர்க்காவைச் சுற்றிடுவாய்



பாவட்டஞ் சோலையிலே என்ற மெட்டு.

கண்ணிகள்.

பாரதத் தாய்நாடு — கண்ணம்மா
பாங்குடைய நாடு
பாங்குடைய நாடு — நெற்கதி
ரோங்குந் திருநாடு

மாரதர் நன்னாடு — கண்ணம்மா
வன்னத்தமிழ் நாடு
வன்னத்தமிழ் நாடு — கற்புடைய
கன்னியர் வாழ்நாடு

இந்தியத் தாய்நாடு — கண்ணம்மா
ஏற்றமுள்ள நாடு
ஏற்றமுள்ள நாடு — புண்ணியர்கள்
தோற்றமுள்ள நாடு

---

ஒரிஜினல் கோலம்பியா கீதங்கள் என்பதை
பார்த்து வாங்குங்கள்.

முந்து தமிழரசர் — கண்ணம்மா
முத்தி பெற்றநாடு
முத்தி பெற்றநாடு — எண்ணரிய
சித்தி பெற்றநாடு

இப்படி சீர்குலைந்தால் — கண்ணம்மா
எப்படி நாம்பிழைப்போம்
எப்படி நாம்பிழைப்போம் — மகாத்மா
சொற்படியே நடப்போம்

செப்பிடுங் கைராட்டை — கண்ணம்மா
தீர்க்கமாய்ச் சுற்றிடுவோம்
தீர்க்கமாய்ச் சுற்றிடுவோம் — கதர்நூல்
நூற்கவே கற்றிடுவோம்

சொல்லிக்கொண்டே யிருந்தால் — கண்ணம்மா
சுகமில்லை தெரிவாய்
சுகமில்லை தெரிவாய் — சர்க்காவைச்
சுற்றவேணும் பரிவாய்

நல்லக் கதராடை — கண்ணம்மா
நாமணிய வேண்டும்
நாமணிய வேண்டும் — சுயாட்சி
நன்மைபெற வேண்டும்

---

ஸ்ரீமான் மங்களதாஸ் இயற்றிய மதுரகான பக்திரஸ
கீர்த்தனம் விலை அணா 5.

வல்லரக்கர் தொலைந்தால் — கண்ணம்மா
வளம் பெருகுமடி
வளம் பெருகுமடி — ஜெய மங்
களம் பெருகுமடி



## ராஜவிஸ்வாச லாலாலஜபதியே என்ற மெட்டு

### பல்லவி

கைத்தறியாலே செய்தக் கதரணிவீர்
காந்தி கதரணிவீர்

### அனுபல்லவி

சித்த வைராக்கிய தேசாபி மானிகள் (கை)

### தொகையறு

எண்ணில்லா ஏழைமக்களுண்ண உணவில்லாம
வின்னல்கொண்டு
கண்ணில்லாக் குருடரைப்போல் கலங்குகின்ற தருணத்தில்
காந்தியடிகள்
தண்ணளிகூர் தாய்நாட்டில் ராட்டிணத்தால் நூல் நூற்று
தாமேசெய்து
மண்ணுலகோ ரணியுங்கால் நலம்பெறலா மென்ற,
திருவசனமன்றோ

---

எல்லாவித புத்தகங்களும் எங்களிடத்தில் கிடைக்கும்
T. S. சுந்தரம் பிள்ளை, புக்செல்லர், தெப்பகுளம், திருச்சி.

முடுக்து

மானில மீதினில் கோருஞ் சுயாட்சி
தானித மாய்பெற வேயிது சூட்சி
மங்கள சரமாய்
மாவிசித் திரமாய் (கை)

# ஸ்ரீ பாரததேவி பதத்துதி சாகித்யம்.

சிவதீக்ஷாபரு என்ற கீர்த்தனை மெட்டு.

இராகம்—குரிஞ்சி தாளம் ஆதி.

பல்லவி

ஜெயஸ்ரீ பாரதி தேவதி யே
சீர்பதம் போற்றும் எனையா தரியே (ஜெய)

அநுபல்லவி

தயைகூர் பவானியே
சகலஜீவ சாட்சியே
தந்தாள் நினது சரண கதியே (ஜெய)

வாக்கருள் வாணியே
பாக்ய கல்யாணியே
மங்கள நாதன் தமிழ்வா ருதியே (ஜெய)

---

எம்மால் வெளியிட்டுள்ள தேசீய கீதங்கள் 1, 2, 3 & 4
பாகங்கள் அவசியம் பார்க்கவும்

## நாரதரேயம் மாதவள் என்ற மெட்டு.

இராகம்—பீயாக் தாளம் ஆதி.

காந்தி சந்யாசி சாந்தியாய் பேசி
கடவுள்போல் நம்மை காக்கும் விஸ்வாசி (கா)

வர்த்தகமேவும் கைத்தொழில் யாவும்
புத்துயிராக போந்தனர் மேலும் (கா)

தூய மகாத்மா சொற்படி நாமே
சூழ்ந்து கைருட்டை சுற்றிடுவோமே (கா)

மாநிலம் போற்றும் மங்களதீப
மானப்ர தாப ஞான சொரூப (கா)

## சிறைவாயில் தனிலழுதாள் என்ற மெட்டு.

பல்லவி

குடிப்பது பாபமன்றோ கள்ளு சாராயம்
குடிப்பது பாபமன்றோ

அநுபல்லவி

அடிக்கடி சண்டை யாகியே மண்டை
உடைபட்டுதிரம் பொழிய உணர் வழிய (குடி)

---

இதன் துடர்ச்சி நான்காம்பாகம் அவசியம்
பார்க்கவும்.

176266

தோகையறா

கல்லனைய நெஞ்சகமும் கனிந்துருக மாமுனிவர் காந்தியடிகள்
சொல்லியதோர் வாக்கியமே துணையென்று மதுவிலக்க துணிவோமாகில்
இல்லமதை பொன்னாலே இழைத்திட்லாம் எந்நாளும் இம்சை பண்ணும்
வல்லரசுக் கடிமையின்றி சுயராஜ்யம் பெற்றுமிக வாழலாமே

பாட்டு

வஞ்சிறை புகவே சஞ்சல மிகவே
மானாபிமானம் கெடவே வசைபடவே (கு)

தோகையறா

சண்டாள மதுக்குடியால் தாரணியின் மீதே
பெண்டீர்தம் பிள்ளைகளை பேணாமல் தீதே
உண்டாகும் மிடிமை பல உண்டாகும் சூதே
கொண்டாடச் செய்யுமிந்த கொடுமையுத வாதே

பாட்டு

மனுதர்ம நீத மங்களவேத
வாக்கியந்தன்னை மறந்து மனந்துணிந்து (கு)

ராதா அச்சுக்கூடம் பெரியக்கடைவீதி, திருச்சி.-1931

# NATIONAL MUSIC EMPORIUM,

AGENTS FOR GRAMAPHONES & RECORDS

SCIENTIFIC & EXPERT OPTICIANS

DEALERS IN

West End and other high class Watches, Harmoniums, Violins, Electrical Lamps, Stoves, Fountain Pens, Optical goods etc..

**BIG BAZAAR ROAD, TRICHINOPOLY.**

நேஷனல் மியூசிக் எம்போரியம்,

பெரியகடை வீதி, திருச்சி.





...ஸ்டர்ஸ் வாய்ஸ், கோலம்பியா, ஓடியன் கிராமபோன்களும், ரிக்கார்டுகளும், டுவின் ரிக்கார்டுகளும் கிடைக்கும். மற்ற ஹார்மோனியம், பிடில், வீணை, பாஞ்சோ, புல் புல் தாரா முதலிய வாத்தியங்களும், மூக்குக் கண்ணாடிகள், எலக்டிரிக் விளக்குகள், பல்புகள், ஸ்டவ், ரோல்டுகோல்டு சாமான்கள், பவுண்டன்பேனா வகையறா பலவிதமான கெடியாரங்களும் எங்களிடம் தயாரிலிருக்கின்றன.

☞ ஒருமுறை எங்கள் புதிய கம்பெனிக்கு விஜயம் செய்யுங்கள்.


---


இப்புத்தகமும் மற்ற புத்தகங்களும் கீழ்க்கண்ட விலாசத்தில் கிடைக்கும்:—

T. S. சுந்தரம் பிள்ளை,

பப்ளிஷர் & புக் ஸெல்லர்,

தெப்பக்குளம், திருச்சி.

